Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

| மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு ஆவணித் திங்கள்<br>1933 ஷ ஆகஸ்டுமீ | இதழ் ௮ |
|---|---|---|

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையை முப்பது ஆண்டுகளாக நடத்திவரும்
சைவத் திருவாளர் ந. சிவகுருநாத பிள்ளையவர்கள்
அறுபதாம் ஆண்டு நிறைவுவிழாவில்
சைவசித்தாந்த மகா சமாஜத்தினர் வழங்கிய

## உபசரிப்புப் பத்திரம்

செந்தமிழ் மொழியும் அந்தமிற் சைவமும்
செந்தமிழ் நாட்டுச் சொந்தகண் களென
கொண்டவை புரந்த சண்ட மாருதம்
கற்பன கற்றோன், முற்பத வறிஞன்,
தொற்பத மேவ தற்பரங் கண்டோன்
சோம சுந்தர நாயக வள்ளலே
தவக்குரு வாயுடை சிவக்குரு நாத !
இறைஉயிர் கட்டு எனப்பகர் மூன்றின்
முறைநிலை யறிந்து உரைவழி நிற்போய் !
உறுதிப் பொருள்நூல் அறுதியிட் டாய்ந்து
கருதும் புலவர் விருந்தெனக் காண்போய் !
சீடனுங் குருவுமென் றேடதில் காண்பதன்
எடுத்துக் காட்டாய் அடுத்துளீர் நீவிர்.
குருவினைப் போன்று நிறுவினை சைவ
பத்தித் ததும்ப சித்தாந்த சபை
தூத்துக் குடியினில் காத்தங் கிருப்போய் !

செய்முறை திவழும் சைவநற் சபைகளுள்
மூத்ததும் குருவதும் தூத்துக் குடியதும்
தொன்மைய பிறவெலாம் அண்மைய வன்றே!
குருவினில் ஒளிதரு பெருமைகா ரணமாய்
குருநா தப்பேர்க் குகந்தமை கேண்மோ!
இசைப்பெயர் கொண்டு திசைப்பெயர் கொளுமொழி
தன்னிலை கெடாதுமுன் நன்னிலை பெருவான்
தென்னிந் தியநூற் பதிப்புக் கழகம்
நிறுவிய குருவோய்! நெறியின் நடத்துவோய்
செந்தமிழ் நூற்களின் செவ்விய பொருளைச்
செந்தமிழ்ப் புலவராம் செவிலித் தாயின்
மணிவயிற் றளித்து மக்கட் குதவிட
செந்தமிழ்ச் செல்வி எந்தமக் களிப்போய்!
பாவும் "சைவப் பிரகாசப்" பெயர்
மெச்சுமா றருளினை அச்சுக்கூடம்.
இன்னுங் கேண்மோ நின்னுடை பெருமை,
நுண்ணறி பொருள்நூல் நுணித்தறி திறலான்
வேழங் காண்பான் விழைந்த விழியிலர்க்(கு)
ஆழங் காண்பான் ஆற்றுவை அரிவுரை
சித்த முருக பத்திரன் விலைபெற
மெத்தச் சிறந்த சித்தாந்தப் பொருள்
எத்தனை முறைகொலோ சித்தியார் போதநூல்
பத்தர்தா முணரப் பாடங் கூறினை!
ஒருநெறி பெருநெறி இருநெறி எனுமதன்
இன்பத் திளைத்த அன்புமே விட்டான்
பெற்றவோர் இன்பம் பெறுகவை யகமென
கடன்பணி செய்வான் இடம்பல செல்லும்
உயிர்ப்புமிழ் சொற்பொழிவு பயிர்ப்புமிக் குடையோய்,
குறைவது தமது குருவான் விடப்பெறின்;
நிறைவது காண்பான் நீணிலம் வந்தோய்!
எப்புவி யோரும் ஒப்ப ஒளிர்வதும்
செப்பு மிலக்கணச் செய்கை முறையதும்
சைவநற் சமயமென் சைவசித் தாந்தம
காசமா சத்தின் நேசமிக் குடையாய்!
முதுமையும் பொருள்செயா முதுகெலும் பனைத்து
ஆற்றுநம் தொண்டு சாற்றவும் படுமோ!
வம்பிலிச் சீமுகம் அம்பிகைக் குகந்த
ஆடிப் பூரநாள் தேடிய யாம்மகிழ்
அறுபது ஆண்டுநிற் றரும்பெரு திருநாள்.

மறைவீர் எழுவீர் மறைவிலா தென்றும்
இழிதலிற் குன்று இயைபுடையே னென்றும்
ஆடிப் பெருக்கினை நாடிய நதியின்
ஓடுநீர்த் துளியினும் ஈடிலெண் மணலினும்
நீடுநீர் வாழிய! நீடுவா ழியவே!!

தூத்துக்குடி
26—7—33
திருஆடிப்பூர நன்னாள்

இங்ஙனம்:

சைவசித்தாந்த மகா சமாஜத்தினேம்.

இப்பாவை யாத்தவர் திரு - ந. மு. வேங்கடசாமி நாட்டார் சீடனர் லால்குடி மருதனர்.

# சிவபெருமானுடைய பத்து ஆயுதங்கள்

[ச. பொன்னுசாமிக் குருக்கள், சுதுமலை, யாழ்ப்பாணம்]

திரிசூலம், பரசு, கட்கம், வச்சிரம், அபயம், சர்ப்பம், பாசம், அங்குசம், கண்டை, அக்கினி என்பன சிவபெருமான் ஆயுதங்கள். இவற்றுள்ளே திரிசூல்மாவது ஆரிணி சனனி ரோதயித்திரி என்னும் மூன்று சத்திகளைக் காட்டும். திரிசூலத்தை ஏந்துதல் இந்த மூன்று குணங்களும் அவரிடத்துள் ளனவென்பதை வெளிப்படுத்தும். மழுவாகிய பரசு, வாய்மை என்னும் குணவடிவமாம். அவருடைய பிரதாப குணமே கட்கமாம். கட்கம்=வாள். எவ்விதத்தாலும் வலிந்து போதிக்க முடியாத அவருடைய இயல்பு வச்சிரா யுதமாம். ஆன்மாக்கள் மேல் வைத்த அநுக்கிரக குணமே அபய முத்திரை யாம். குண்டலி சத்தி என்னும் சுத்த மாயையே நாகமாம். பிரபஞ்ச காரண மான மாயையே பாசமாம். விவர்ணமே அங்குசமாம். சத்த மூலமான நாதமே கண்டையாம். பாசங்களைத் தகிக்கும் அவருடைய அருட்குணமே அக்கினியாம்.

சிவபெருமான் ஆன்மாக்களின் பாசபந்தத்தை நீக்கி முத்தி கொடுத்தற் பொருட்டுத் தம் அருட் குணங்களாகிய வடிவமும், சுட்டிய பொருள்களாகிய பத்து ஆயுதங்களும் உள்ளவராயிருப்பர். ஆன்மாக்கள் மேல் வைத்த இரக்க மாகிய அருளே உமையென்னுஞ் சத்தியாம். பசுவெனப்படும் ஆன்மாவே அவர் எழுந்தருளும் வாகனமாகிய இடபமாம்.

ஆன்மாக்களிடத்து இவ் அருட் குணங்களோடு எழுந்தருளியிருந்து பாசபந்த நீக்கி முத்தியருளுதல் அவர் கொள்ளும் அருள் வடிவின் பிரயோ சனமாமென்பது இக்குறிப்புரைகளினல் நன்குபுலப்படும். இவ்வுண்மைகளை யறியாத மக்கள், "மாட்டின்மே லேறுபவராயும் பெண்ணையுடையவராயும் ஆயுதங்கள் தரித்தவராயும் உள்ள உங்கள் சிவன் யாங்ஙனம் கடவுட்டன்மை உடையவராவர்?" என்று கூறி இகழ்வார்கள். சிவவடிவின் சொரூப உண்மை யறிந்த பெரியோர் அவர்கள் கூற்றைக்கண்டு மயங்கார்.

ஆரிணி, சனனி, ரோதயித்திரி என்னும் மூன்று சத்திகள் அவருக்குக் கரணங்களாயுள்ளன. சர்வ சங்கார சாமர்த்தியத்தையுடைய அவருடைய சத்தி ஆரிணி என்று சொல்லப்படும். மாயையிலிருந்து காரிய ரூபமாய்த் தோன்றும் இயல்பினையுடைய உலகத்தினது தோற்றத்துக்குக் காரணமாயுள்ளதும் அளவிறந்த பிரகாசத்தையுடையதுமான சத்தி சனனி என்று பெயர் பெறும். ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்ற பயனாகிய போகங்களை அவ்வவ்வான்மாக்கள் அநுபவித்தொழிக்கும்படி நியமிக்கப்படுஞ் சத்தியானது ரோதயித்திரி என்று சொல்லப்படும். இந்த மூன்று சத்திகளும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் அவரிடத்து நிகழ்தற்கேற்ற கரணங்களாய் அவரது வடிவத்திற் பொருந்தியிருக்கும்.

## கண்ணப்பரின் கனிவு

[அ. மு. பரமசிவானந்தம், அங்கம்பாக்கம்]

'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்ஒப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணை
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி.'

என்று மணிவாசகரால் மகிழ்ந்து போற்றப்பட்டவரும், பொத்தப்பி நாட்டின் தலைவனாகிய நாகனது நற்றவப் பயனாய்த் தோன்றியவரும், ஆறே நாட்களில் ஆண்டவனது அடிகளை அடைந்தவருமாகிய க்ண்ணப்பரின் கனிவு போற்றற் பாலது.

மேதினி மக்கள் மேன்மையுறவும், வேடுவர்குலம் விளங்கி ஓங்கவும் சமுத்திரத்திடத்துச் சந்திரன் உதித்தாற்போன்று, தத்தையிடத்துத் திண்ணனார் திரு அவதாரம் செய்தார். அவர், வேடுவர்குல முறைப்படி வில் வித்தை முதலியன பயின்று இளமைப் பருவத்தை இனிமையாய்க் கழித்து, பெற்றோரை மகிழ்வித்துப் பதினாறாட்டைப் பிராயத்தராயினர். அக்காலத்து அனையவர் விருப்பிற் கிணங்கியும், தந்தையார் உத்தரவை மேற்கொண்டும் குலவேடுவரோடு, கொடுங்கானம் புகுந்து வேட்டையாடினர். ஆங்கே ஒரு கேழல்தோன்ற அதைத்திண்ணனாரும், நாணன் காடன் என்ற இருமறவரும் துரத்தியடித்துத் தூரத்தே கொன்று வீழ்த்தினர். பன்றி வீழ்த்தப்பட்ட இடத்துக்கு அருகிலுள்ள காளத்தி நாதரின் பெருமையை நாணன் கூறக் கேட்ட திண்ணனார்க்குக் காளத்தி நாதரைக் காணவேண்டுமென்ற அவா மீதூர்ந்தது. காடனைக் கறிசமைக்கப் பணித்து, மற்றிருவரும் மலைமீதேறினர். திண்ணனார் மலைமீதேறிச் சென்றதை,

'நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி

ஆனையாஞ் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீனில மலையை யேறி நேர்படச் செல்லும் போதில்'

என்று சேக்கிழார் சிறப்பித்துள்ளார். அவ்வாறு சென்ற அண்ணலார் மலை உச்சியிலே உதித்தெழுந்த உத்தமரைக் கண்டு, மோகமாய் விரைந்தோடிச் சென்றுத் தழுவிக்களித்தனர். ஆண்டு ஈசனார் யாதொரு துணையுமின்றி தனித்து நிற்பதால் மனம்சோம்பினர். உடனே தாம் அவர்க்குப் பூசை செய்ய வேண்டுமென்று புந்திகொண்டு வேகமாக மலையினின்று இழிந்தார். பிறகு தம் நண்பரைத் தனியேவிடுத்து, ஈசனாரின் பூசைமேற்பற்றேங்கி, செய்வதிது வென அறியாது பூசைவத்துகளைச் சேமித்தனர்.

'விரகினிற் கடைந்த வெங்கனற் காய்ச்சி
நறுவிய இறைச்சி நல்லது சுவைக்கண்டு
அண்ணற் கமிர்தென் றதவே றமைத்து
தண்ணருஞ் சுனைநீர் தன்வாய்க் குடத்தான்
மஞ்சன மாக முகந்து மலரெனக்
குஞ்சியிற் றுவர்க்குலை சொருகிக்
குனிச்சிலை கடுங்கணை அதனொடும் ஏந்தி
கனல்விழிக் கருங்குர ளுய்பின் தொடர யாவரும்
வெருக்கோ ளுற்ற வெங்கடம் பகலிற்
றிருக்கா ளத்தி யெய்திய சிவற்கு'

என்று இக் கண்ணப்பரின் பூசைமுறையை நக்கீரர் நயம்படுத்தியுள்ளார். இத்தகைய இன்பப்பூசையாம் அன்பைப்புரிந்து, இரவிலும் இடர்நீக்கக் கருதி இறைவனைப் பாதுகாக்க அருகிலேயே அம்புடனும் வில்லுடனும் திண்ணனார் அமர்ந்திருந்தனர்.

மறுநாட் காலை திண்ணனார் எழுந்து அவர் உணவைத் தேட, அச்சிவ னுக்கு நித்திய பூசை புரியும் பெரியாராகிய அந்தணர் அவ்விடம் அடைந்து, ஆண்டுள்ள இறைச்சி முதலியவைகளைக் கண்டு கடுங்கோபங் கொண்டு, அவைகளைக் களைந்து, தம் நித்திய பூசையை நிறைவேற்றினர். இவ்வாறு ஐந்து நாட்களகல அந்நிய பூசைக்குத் தளர்வெய்திய அந்தணர் அரிதுயில் கொள்ளும்பொழுது ஆண்டவன் அவர் கனவிற்றோன்றி உணர்த்துவார் :

'அவனுடைய வடிவெல்லாம் நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார்'

மற்றும்,

'அவன்
செருப்படி யாவன வருப்புறு தவலே
யெழிலவன் வாயது தூயபொற் குடமே
அதனிற் றங்குநீர் கங்கையின் புனலே
புனற்கிடு மாமணி அவன்நிரைப் பல்லே
அதற்கிடு தூமலர் அவனது நாவே
உப்புனல் விடும்பொழு தரிஞ்சிய மீசைப்

புன்மயிர் குசையினும் நம்மடிக்கினிதே யவன்றலை
தருக்கிய சருகிலை தருப்பையிற் பொலித்த
அங்குலி கற்பகத்தலரே, அவனுகந்து
இட்ட இறைச்சி எனக்குநன் மாதவர்
இட்ட நெய்பா லவியே
இது எனக்கு, உனக்கு அவன்
கலந்ததோ ரன்பு காட்டுவன் நாளை'

என்றிசைத்து மறைந்தான்.

பிற்றை நாட்காலை பிராமணர் நித்தியபூசை முடித்து மறைவில் இருந்தார். திண்ணனார் இனித்த அன்புடனும் அபிடேக ஆராதனை வத்துக்களுடனும் பல துர்ச்சகுனங்களிடையே அவ்விடமடைந்தார். இச்சமயத்தே அடியார்க்கெளியன் தம்அடியார் அன்பை அவனிக்கறிவிக்க அவாக்கொண்டு தமது இடக்கண்ணில் உதிரம் பெருகச் செய்தார். அதைக்கண்ட திண்ணனார் கதறியழுது கையிலுள்ள அபிடேக வத்துக்கள் வீழவும் தாமும் விழுந்து வருந்தி, 'இது செய்திட்டார் யாவர்? யாண்டுளர்?' என்று தேடிச்சென்றார். ஒருவரையும் கண்டாரில்லை. கடைசியாக அக்கண்ணொழுக்கிற்கு மருந்தை அம்மலை முழுதும் தேடிப் பல மூலிகைகளைப் பிழிந்தார். இரத்தமோ நில்லாது சொரிந்தது. பிறகு திண்ணனார் உற்ற நோய் தீர்ப்பதூனுக்கூனெனும் உரை கண்டு, உடனே தம் இடக் கண்ணைக் களைந்து ஈசனாரின் கண்ணிலப்பினார். உடனே இடக்கண் இரத்தம் நின்றது. ஈசனார் திண்ணனார் அன்பைத் திடப்படுத்தும் பொருட்டு வலக் கண்ணிலும் இரத்தம் வடியச்செய்தார். இதைக் கண்ட கண்ணப்பர் மருந்து கைவரப் பெற்றவராகையான் மறு கண்ணையும் பெயர்க்கத் துணிந்து,

'கண்ணுதல் கண்ணிற் றங்கண் இடந்தப்பிற் சாறு நேர்பா
டென்றுவார் தம்பி ரான்தன் திருக்கண்ணில் இடத்தா ளூன்றி
உண்ணிறை விருப்பி னோடும் ஒருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணில் ஊன்றத் தரித்திலர் தேவ தேவர்'

காளத்திநாதன் இதனைத் தரியாதவனாகி,

'நில்லு கண்ணப்ப நில்லுகண் ணப்பஎன்
றின்னுரை யதனொடு மெழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையால்
அன்னவன் தன்கை யம்பொடு மகப்பட
பிடித் தருளினன்'

இத்தகைய ஒப்பற்ற செய்கையினைக் கண்டு விண்ணவர் பூமாரி பொழிந்தனர். அண்ணலார் கண்ணப்பரை வலப்பக்கத்தமர்த்தினர். இதனினும் பக்தி! சிறந்தபேறு வேறு உண்டோ! இதுவன்றோ உண்மை அன்பு! கண்ணையும், உயிரையும் பொருளெனக் கருதாது கொடுத்த உத்தமரின் உயர் குணத்தைக் காட்டிலும் உலகில் வேறு உண்டோ! இதனாலன்றோ மணிவாசகரும் 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்' என்றார்.

# அப்பரது அஞ்சாமை

[பே. கோவிந்த முப்பனுர்]

அப்பர் முற்றத் துறந்த முனிவர். அவர் சிவபெருமானிடத்து அளவிறந்த அன்புடையார். அன்பினுல் அவர் பாடியருளிய தேவாரம் படிப்பவர் கன்மனத்தையுங் கனிவிக்கும். இறைவனுக்குப் பணிய வேண்டுமென்பது அடிகளது உயர்ந்த கொள்கைகளில் ஒன்று. பணிதலே தமது கடமை என்றும், அதனையே இறைவன் விரும்புகிறுன் என்றும் அவர் பலவிடங்களிலும் பாடியிருக்கிறுர்.

" தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவும் சொல்லி,

" அழுமவர்க் கன்பர் போலும் ஆவடு துறையனுரே"

" அடிமையை அளப்பர் போலும் ஆவடு துறையனுரே"

என்பவற்றுனும் பிறவற்றுனும் அறிக.

அப்பரிடம் பணிவு காணப்பட்டாலும், அவரிடம் அஞ்சாமையும் ஒருபால் காணப்படுகிறது. அஞ்சாமை அரசரிடத்தும் வீரரிடத்தும் காணப்படும் குணம். நாயனுர் முற்றத் துறந்த முனிவர். அவரிடம் பணிவே இருக்கவேண்டும். அன்றியும்,

" போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றுதே ஆற்றநாள் போக்கினேனே."

" பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவு செய்தேன்"

என்பன போன்றனவற்றுல் அடிகள், இளமையைச் சமண சமயத்திலிருந்து போக்கி, முதுமையிலேயே சைவ சமயத்தில் புகுந்தார் என்று அறியக் கிடத்தலின், முதுமைக் காலத்திலும் பணிவே இருக்கவேண்டும். ஆனுல் அரசரிடத்தும் வீரரிடத்தும் இளமட்டத்திடத்தும் காணப்படும் அஞ்சாமை முனிவராய், முதியாய்ப் பணிவுடையவராயிருந்த அப்பரிடத்தில் ஒருபால் காணப்படுகிறது.

" கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்றலதுவே படை"

என்ற குறளிலுள்ள வீரம்,

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்"

" அடையா அவலம் அருவினை சாராநமனை அஞ்சோம்"

என்ற தேவாரத் துணுக்குகளில் காணப்படுகிறது.

நாயனுரிடம் காணப்படும் அஞ்சாமைக் குணம் அவர் சைவசமயத்தில் புகுந்தபின்பே காணப்படுகிறது. சைவசமயத்தில் புகுவதற்குமுன், அவர் சூலை நோயால் வருந்தி,

"கூற்றாயின வாறு விலக்ககிலீர்......
ஆற்றேனடியேன் அதிகைக்கெடில வீரட்டானத்துறை அம்மானே"

என்றும்,

"நஞ்சாகி வந்தென்னை நலிவதனை நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலு மென்னீர் அதிகைக்கெடில வீரட்டானத்துறை அம்மானே"

என்றும், பாடித் தாம் வருந்துதலையும், வருந்தி அஞ்சுகின்ற தமக்கு அஞ்ச வேண்டாமென்று அருள் செய்யும்படி வீரட்டானத்துறை அம்மானை வேண்டிக்கொள்ளுதலையும் வெளிப்படுத்துகிறார். சைவமதத்தில் சேர்ந்தபின் நாயனாரிடம் அஞ்சாமைக் குணம் தாண்டவமாடுகிறது.

அப்பர் சமண சமயத்தி லிருக்கும்பொழுது, அக்காலத்திருந்த சமண முனிவர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கினார். சமண முனிவரனைவரும் அப்பருக்கு உயிர்த் துணைவராக இருந்தனர். அக்காலத்தில் நடுநாட்டை ஆட்சிசெய்த மகேந்திரப் பல்லவனும் சமணனாகையால் அவனும் நாயனாரிடம் அன்புடையவனாயிருந்தான். அவர் சைவசமயம் புகுந்தபின்னர் உயிர்த் துணைவர்களாக இருந்த முனிவர்களும், அரசனுமே பகைவராயினர். அரசன் மகேந்திரன் அக்காலத்துப் பெரிய அரசர்களில் ஒருவன். அவன் கரி பரி தேர் காலாள் என்ற நால்வகைப் படையுடையவன். கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்ட அமைச்சர்களை யுடையவன். அவனோடுதான் நாயனார் போர்செய்யத் தொடங்கினார். தொடங்குகையில் நாயனார் ஒரு துணியை ஆடையாகவும், திருநீற்றை அணியாகவும் தம் தமக்கையார் திலகவதியாரைத் துணைவராகவும் உடையவராக இருந்தார். ஆடையாலும் திருநீற்றினாலும் திலகவதியாராலும் யாது பயன்? நாயனார் தம்மிடத்திலுள்ள அஞ்சாமையைக் கொண்டே அரசனோடு போர் தொடங்கினார்: 'அஞ்சேலு மென்னீர் அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே' என்று இறைவனை வேண்டிக்கொண்டவருக்கு அஞ்சாமை எவ்வாறு ஏற்படும் என்று கேட்கலாம். 'அஞ்சேலுமென்னீர்?' என்று கேட்டவுடன் இறைவன் நாயனாரிடமிருந்த சூலை நோயை நீக்கி 'அஞ்சேல்' என்று அருள் புரிந்து விட்டார். முதன் முதலாக நாயனாரால் பாடப்பட்ட பதிகம் 'கூற்றாயினவாறு' என்று தொடங்கும் செய்யுளை யுடையது. இரண்டாவது பாடப்பட்ட பதிகம் மறுமாற்றத் திருத்தாண்டகம். அதில் "உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப்போனார்" என்று அருளிச் செய்வதால், சூலை நோய் நீங்கிற்றென்றறியலாம். கூற்றுப்போலவும், நஞ்சுபோலவும் துன்பஞ் செய்த சூலை நோயைத் தீர்த்தருளிய கடவுள் அரசனால் வரும் துன்பத்தையும் போக்கியருளுவான் என்ற உறுதியால் நாயனாருக்கு அஞ்சாமை ஏற்பட்டிருக்கவேண்டும். ஏற்படவே இறைவனும் நாயனாருக்கு அஞ்சவேண்டாமென்று கூறியிருக்கவேண்டும். "அருகாக வந்தென்னை அஞ்சேல் என்பார் ஆவடுதண் டுறையுறையும் அமரரேறே" என்று அடிகள் அருளியதும் இக்கால நிகழ்ச்சியை நோக்கிப்போலும்.

நாயனார் சைவ சமயஞ் சார்ந்ததையும் அவரது தீராநோய் தீர்ந்ததையும் செவியுற்ற சமணமுனிவர்கள், தலைவராகிய தருமசேனர் செய்கையை மாந்தர்

கேள்விப்பட்டால் அவர்கள் சமணசமயத்திற் கொண்டுள்ள நம்பிக்கையை யிழப்பர்; தலைவரைப் பின்பற்றிப் பலர் சைவ சமயஞ் சாரவுங்கூடும்; சமயத்திற்குக் கேடு நேரவிடாமல் தருமசேனரைக்கொலை செய்வது நலம், என்று சூழ்ச்சி செய்து, அரசனிடஞ் சென்று, ‘தமது தமக்கையாராகிய திலகவதியாரது சொல்லைக் கேட்டுத் தமக்குச் சூலை நோய் வந்ததாகவும், அது நீங்கிற்றிலதாகவும் பொய்க்காரணங் கூறித் தருமசேனர், தமக்கையார் கைக்கொண்ட சைவ சமயம்புக்கு, புக்கபின் தம்மை வருத்திய சூலைநோய் தீர்ந்தது என்று பொய்ம்மொழி புகன்று நமது சமயத்தில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படாவண்ணம் சமயத்திற்குத் தீங்கு செய்கின்றனர்’ என்று பொய் கூறி அவரைத் தண்டிக்கும்படி ஏவினர். அரசன் சமணப்பற்றுடையவனுதலாலும், முனிவர்கள் பொய் கூறுர் என்ற நம்பிக்கையுள்ளவனுதலாலும், அன்னுர் சொற்படி தண்டிப்பதற்கு அப்பரைத் தன்னிடம் அழைத்துவர அமைச்சர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்கள் சென்று தாம் வந்த செய்தியைக் கூறி அடிகளை அழைத்தார்கள். இறைவன் தமது தீராநோயைத் தீர்த்து ஆட்கொண்டமையாலும், அதுகாரணமாகத் தாம் சிவபெருமானுக்கு அடிமைப்பட்டமையாலும், அரசனிடம் சென்ருல், அவன் சமண சமயத்தைச் சாருமாறு கட்டளையிடுவான் என்ற எண்ணத்தாலும், அரசனினும் உயர்ந்த இறைவனுக்கு அடிமைப்பட்ட அடிமை, அரசனுக்கும் ஏனை அமைச்சர் முதலானவர்களுக்கும் அஞ்சவேண்டாம் என்ற அஞ்சாமையாலும், தம்மை அழைத்த அமைச்சர்களுக்கு மறுமொழி செய்யுளிலேயே கொடுத்தார். அதுவே மறுமாற்றத் திருத்தாண்டகம்,

“நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்”

என்றும்,

“நாவலர் தீவகத் தினுக்கு நாதரான
காவலரே ஏவி விடுத்தாரேனும் கடவமலோம்”

என்றும்,

“வந்நீரார் மன்னவன் தானுவானுரே”

என்றும்,

“உம்மோடும் மற்றும் உளரா நின்ற
படையுடையான் பணிகேட்கும் பணியோ மல்லோம்”

என்றும்,

“தென்திசைக் கோன் தானேவந்து
கோவாடிக் குற்றேவல் செய்என்ருலும் குணமாக்கொள்ளோம்”

என்றும் தம்மை அழைத்த அமைச்சர்களுக்கு அஞ்சா நெஞ்சமுடையவராய் அடிகள் விடைகொடுத்தார். அத்தாண்டகத்திலேயே அரசன் ஏவலிற்பட்டு அவன் பணி செய்யாமைக்குக் காரணம் ‘பற்றற்ருேம்’ என்றும்,

“யாமார்க்கும் குடியல்லோம்”

என்றும்,

“நாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண்குழை யோர்காதிற்
கோமாற்கே யாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச் சேவடியிணை யேகுறுகி னோமே”

என்றும்,

“சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்
சிவபெருமான் திருவடி யேசேரப் பெற்றோம்”

என்றும்,

“உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்”

என்றும் கூறுகின்றார். இல்லறம் துறவறம் என்ற இருபிரிவுபட்டு வாழும் மக்களுக்குள், இல்லறத்தார்க்கு, அவர்கள் உலகப் பொருளைக் கள்வர் பகைவர் முதலியவர்கள் களவு வௌவல் முதலியன செய்யாதிருத்தற்பொருட்டு அரசன் உதவி வேண்டுதலின் அவர்கள் அரசனுக்குக் கட்டுப்பட்ட குடிகளாவர்; யாம் நிலையாமை யுணர்ந்து மெய்யுணர்ந்து வீடுபேறுவேண்டும் துறவியாகலின், எமக்கு அரசன் உதவி வேண்டாமையின் யாம் அரசனுக்குக் கட்டுப்பட்டு நடக்கும் குடியல்லேம் என்பார், ‘பற்றற்றோம்’ என்றும் ‘நாமார்க்கும் குடியல்லோம்’ என்றும், நிலைமையாமையுணர்ந்து மெய்யுணர்ந்து அவாவறுத்தற்கு இறைவன் வேண்டப்படுதலானும், அவற்றால் வீடுபெற்ற வழியும், இறைவனது எண்குணம் பெறுதலே, பேரின்பப் பயனாதலின், அதனைப் பெறுதற்கும் இறைவன் வேண்டப்படுதலாலும் அவனுக்கு அடிமைப்பட்டோம் என்பார்,

“கோமாற்கே யாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி யிணையே குறுகினோமே”

என்றும், அவ்விறைவன் மக்களைப்போன்று செத்துச் செத்துப் பிறக்கும் தெய்வம் அன்று, பிறவா யாக்கைப் பெருமான் என்பார்,

“சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோமல்லேம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்”

என்றும், யாம் அடிமைப்பட்டதை அப்பெருமான் ஏற்று எம்மை ஆட்கொண்டான், அதற்கு அறிகுறி உடலுறு நோய் நீர்ந்தமை என்பார்,

“உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப்போனார்”

என்றும் கூறியருளினார். இவை காரணமாதல் காண்க.

“நீண்டினார் தமைத்தீசடும் மன்னர்தீ
ஈண்டுதங் கிளையோடும் எரித்திடும்”

எனும் கொள்கையைக் கொள்ளாது, துறவிக்கு வேந்தன் துரும்பு என்ற கொள்கையைக் கொண்டு அடிகள் அஞ்சாமற் கூறிய விடையைச் செவியுற்ற அமைச்சர்கள், அஞ்சி, அவரை வணங்கித், தங்கள் வேண்டுகோளுக்காகவும் அரசனால் தங்களுக்குத் தீமை நேராமைக்காகவும் அடிகளை வருமாறு வேண்ட, அவரும் இறைவனை மனதில் எண்ணிக்கொண்டு அரசனிடம் சென்றார். அரசனிடம் அமைச்சர்கள் உற்றதெல்லாம் உரைத்தார்கள்.

அப்பர் அமைச்சர்களையும் தன்னையும் மதியாமையால் அரசனுக்கு முன்னையினும் முனிவு ஏற்பட்டது. எரிகிற தீயை நெய்விட்டு வளர்ப்பது போன்று, முனிவர்கள் அடிகளைத் தண்டிக்க அரசனைத் தூண்டினார்கள். அரசன் நாயனாரை நீற்றறையிலிடுமாறு ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டான். தண்டனை உயிர்க்கிறுதி கொடுப்பது. உயிரினும் சிறந்த பொருள் உலகில் இல்லை. "என்னில் யாரும் எனக் கினியாரில்லை" என்று அடிகளும் அருளிச் செய்திருக்கிறார். உயிரை விட யாருக்கு மனம் வரும்? உயிர் வேண்டுமாயின் தம் கொள்கையை மாற்றிக்கொண்டு அரசனிடம் மன்னிப்புப் பெற்றுக்கொள்ளவேண்டும். உயிர் வேண்டாமேல் நீற்றறை புக வேண்டும். "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று சொல்லுதல் யார்க்கும் எளிது; சொல்லிய வண்ணம் செயல் அரிது. நாயனார் பயனில் சொல் பாராட்டுகிறவரல்லர்.

"மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர் நீப்பர் மானம் வரின்"

நாயனார் உயிரை வேண்டாது தாம் உரைத்தவண்ணம் செய்யத் துணிந்தார். 'நமனை அஞ்சோம்' என்ற நாயனார் நீற்றறை புக அஞ்சினாரில்லை. அவரிடம் அஞ்சாமை குடிகொண்டிருந்தது. கூற்றுப் போலவும் நஞ்சுபோலவும் தம்மை வருத்திய சூலைநோயை நீக்கியருளிய கடவுள் தம்மை நீற்றறையிலும் காப்பார் என்ற நம்பிக்கை அவரது அஞ்சாமைக்கு அரணாக இருந்தது. ஏவலாளர் அழைத்தவுடன் அடிகள் நீற்றறைக்குச் சென்றார். தீக்கொழுந்துவிட்டெரிந்த நீற்றறையில் கொல்லாமை மறைந்துறையும் சமணர்கள் அடிகளைத் தள்ளினர். அன்புடையவர்கள் துன்புறாமலிருப்பார்களா? கொடிது! கொடிது! நாயனார் என் செய்வர்? 'தன் கடன் அடியேனையும் தாங்குதல் என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்பது அவரது கொள்கையாதலின் அவர் ஈசன் இணையடி நீழலைப் பிடித்தார்; இன்புற்றார்.

"ஆனந்த வெள்ளத்திடை மூழ்கி அம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
ஊனந்தா னிலராகி உவந்திருந்தார்"

சமணர்கள் எழுநாள் சென்றபின் நீற்றறையைத் திறந்து பார்த்தார்கள். அடிகள் இடுக்கணுறாது இன்புற்றிருத்தலைக் கண்டு சமணர்கள் அலக்கணுற்றனர். 'என்ன அதிசய'மென்று இறும்பூதெய்தினர். நீற்றறையிலிட்டால் நீற்றப்படுவான் என்று உறுதிகொண்ட சமணர்கள் அது நீற்றாமை கண்டு, மாற்றம் விடுக்கும் வழியின்றி மயக்கம் கொண்டனர். இயற்கைப் பொருளாகிய இறைவன் அடியைச் சேர்ந்த அறிவர்களுக்கு, அது திங்கியற்றாது போலும்.

"அல்ல லென்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்

தில்லைமா நகர்ச் சிற்றம்பல வனார்க்கு
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே ''

என்ற செய்யுள், தம்மை யடைந்த பல இடையூறுகளையும் தாம் நுகர்ந்ததைக் குறித்துப் பாடியதுபோலும்.

'' கூற்றங் குறித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு ''

என்ற பொய்யா மொழியும் நோக்கத் தக்கது.

அப்பரை நீற்றறையினின்றும் நீக்கி, அரசனிடம் அழைத்துச் சென்று, 'இவர், தம்மைத் தீ சுடாவண்ணம் சமண சமயத்திலிருந்த காலத்தில் கற்றுக்கொண்ட தீக் கட்டு மந்திரத்தால் தீயைக் கட்டிவிட்டார். அக் காரணத்தால் இவர் தப்பித்துக்கொண்டார்.' என்று பொய் மொழிகளைச் சமணர்கள் பொருந்தக் கூறினர். மேலும் 'சோற்றில் நஞ்சைக் கலந்து உண்பித்தால் அப்பர் இறந்துவிடுவார்' என்று கூறி நஞ்சு கலந்த சோற்றை அவருக்கு உண்பிக்க அரசனிடம் தூண்டினர். அரசனும் அவ்வாறே ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டான்.

நாயனார் நச்சுச் சோற்றை உண்பதற்கும் அஞ்சினாரில்லை. சைவசமயம் புக்குச் சிவபெருமானைப் பணிந்தவுடன் தமக்கு வெந்துயர் செய்த சூலை நோய் விலகினமையால் அவர் இறைவன் தம்மை அடிமையாகக் கொண்டு ஆட்கொண்டான் என்று எண்ணம் கொண்டார். தம்மை ஆட்கொண்ட சிவபெருமானே நமக்குக் கடவுள் என்றும் அக்கடவுளுக்குத் தாம் அடிமை என்றும் உறுதியாக எண்ணினார் என்பது,

'' என்னைத் தன்னடியா னென் றறிதலும்
தன்னை யாளும் பிரானென் றறிந்தனே ''

என்று நாயனார் கூறுதலிற் காண்க. அடிமையானபின் தம் உடல் பொருள் ஆவி மூன்றும் இறைவன் உடைமை என்பதும் அவற்றிற்கு வரும் நன்மையையும் தீமையையும் நோக்க வேண்டியது இறைவனது கடமை என்பதும் அறிவர்களது துணிபாதலின், நாயனார் தமக்கு யாது நேரினும் நெருக:

'' யாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் [னோமே ''
நாமார்க்கே யாமென் றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகி

என்ற கொள்கையுடையவராயிருந்தார். இருக்கையில் அரசன் நீற்றறையிவிட்டான். அதற்கஞ்சாது தம் கொள்கையை உறுதியாகக்கொண்டு, நாயனார் தம் கடமையைச் செய்து கொண்டிருக்க, இறைவன் தன்னடிமைக்கு நேரும் இடுக்கணை நீக்குதல் தன் கடமை என்று எண்ணி விரைந்து, அடிகளைத் தீசுடாவண்ணம் காத்துஆட்கொண்டார். சூலைநோயை நீக்கியும் தீயினின்றுகாத்தும் தம்மை இருமுறை ஆட்கொண்டபின் நாயனாருக்கு எவ்வாறு அச்சம் ஏற்படும்? சூலைநோயை நீக்கியும் தீயினின்று காத்தும் ஆட்கொண்ட இறைவன் இனி எவ்வகை இடையூற்றினின்றும் தம்மை ஆட்கொள்வான் என்ற உறுதி அவருக்கு ஏற்பட்டது. ஏற்படவே ஏவலாளர்கள் கொடுத்த

நஞ்சு கலந்த சோற்றை அடிகள் இறைவனை நினைந்து உண்டார். அந்தச் சோறு அவருக்கு அமுதாயிற்று.

"அஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத் தோதில் நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பாற் சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமுதாக் குவித்தார் நனிபள்ளி அடிகளாரே."

என்று அடிகள் அருளிச் செய்தல் காண்க.

நாயனார் நஞ்சு கலந்த சோற்றினால் சாவாதிருக்கக் கண்ட சமணர்கள் தாங்கள் எடுத்த முயற்சி பலிக்காமலிருப்பதைக்கண்டு பொறாமை கொண்டு, அரசனிடம் அழைத்துச் சென்று, சமண சமயத்திலிருந்த காலத்தில் கற்றுக் கொண்டிருந்த மந்திர வலியால் முன்னர்த் தீயினின்றும் தப்பித்துக்கொண்டதைப் போன்று இன்றும் நஞ்சினின்றும் தப்பித்துக்கொண்டார். மந்திர வலியால் இயற்கைப் பொருளின் கொடுமையை மாற்றிக் கொள்ளுதலின், செய்கையால் தீங்கு செய்விக்க வேண்டு'மென்று கூறி, அடிகளது உடம்பை யானையால் இடறுவிக்கக் கட்டளையிடுமாறு அரசனைத் தூண்டினர். அரசனும் பாகனை அழைத்து அடிகளது உடம்பை யானையால் இடறுவிக்கக் கட்டளையிட்டான். பாகன் அரசன் கட்டளையைத் தலைமேற் கொண்டு மதகரி ஒன்றைக் கட்டவிழ்த்து அப்பரிருக்கும் இடத்திற்குச்செலுத்தினான். அப்பர் யானை தன்னை இடற வருவதைக் கண்டார்; அஞ்சினாரில்லை. நாயனார் தொடக்கத்திலேயே அஞ்சாமையை வெளியிட்டவர். தீயினுக்கும் அஞ்சினாரில்லை; நஞ்சினுக்கும் அஞ்சினாரில்லை. தீயும் நஞ்சும் தமக்குத் தீங்கு செய்யாமையால் யானையும் தமக்குத் தீங்கு செய்யாது என்று எண்ணம் கொண்டார். தீங்கு செய்யினும் அதற்கு அஞ்சுவதில்லை என்று உறுதி கொண்டார். தீயுட் புகுந்த காலையும், நஞ்சை உட்கொண்ட காலையும் அவற்றினுக்கு அஞ்சுவதில்லை என்று நாயனார் பாடிய பாடல்கள் தேவாரத்தில் காணப்படவில்லை. அக்காலத்தில் முனிவருக்கு அஞ்சாமை இருந்தாலும், எவ்வாறு ஆகுமோ என்று ஐயம்போலும், தீயிற் புகுந்த பின்னும், நஞ்சை நுகர்ந்த பின்னும் இனிமேல் இவற்றினும் கொடியவை எத்தனை நேரினும் இவற்றினின்றும் காத்த கடவுள், இனி நேரும் இடையூற்றினின்றும் காப்பார் என்ற துணிவு பிறக்கவே முன்னாிருந்த ஐயம் நீங்கியதுபோலும். நாயனார் யானையைக் கண்டதும்,

"அஞ்சுவதியா தொன்று மில்லை; அஞ்சவருவது மில்லை"

என்று கூறுதலையும், அஞ்சாமைக்குக் காரணம்,

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்...........
திண்ணன் கெடிலப் புனலும்உடையார் ஒருவர் தமர்நாம்"

என்று கூறுதலையும் காண்க.

யானை அடிகள் அண்மையில் சென்றது. அது அடிகளருகு சென்று, அவரை வலம் வந்து வணங்கி நின்றது. யானையின்மேலிருந்த பாகன் நாய

னை இடறுமாறு யானையைச் செலுத்தினன். யானை அசையவில்லை. பாகன் வலுப்படுத்தித் தூண்டினன். யானை பாகனைத் தள்ளிக் கீழே வீழ்த்தி, அண்மையிலிருந்த சமணர்களையும் முனிவர்களையும் முனிந்து, இடறி இடைபூறு செய்து ஏகியது. நாயனருக்கு இடர் ஒரு சிறிதும் எய்திலது. தீயும் நஞ்சும் தீமை செய்யாததுபோலவே அடிகளுக்கு யானையும் தீமை செய்யவில்லை.

> "தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
> மன்னுயி ரெல்லாம் தொழும்"

என்பது பொய்யாமொழி யல்லவா?

இறுதியாகச், சமணர்கள் ஒன்றுகூடி மேலும் யாது செய்வது என்று எண்ணி உறுதி செய்துகொண்டு, பல்லவனிடம் சென்று, நஞ்சமயத்திலிருந்து கற்றுக்கொண்ட மந்திர வலிமையால் தருமசேனன் தப்பித்துக் கொள்கிறான் என்று பழம் பல்லவியையே பாடிப் பணிந்து நின்றனர்: பல்லவன் மேலும் செய்வது யாதேனும் உண்டோ என்று வினவ, தருமசேனனைக் கல்லோடு பிணித்துக் கடலில் வீழ்த்தினல் கல்லோடு கடலில் ஆழ்ந்து அழிந்துபோவான். அழிந்துவிட்டால் சமண சமயத்திற் கிழிவும் சைவசமயத்திற் குயர்வுந்தோன்றாது அழியும் என்றனர். சொல்வதற்கெல்லாம் தலையாட்டம் போடும் பல்லவ மன்னனும் ஏவலாளர்களுக்கு அவ்வாறே புரிய கட்டளையிட்டனன். ஏவலாளர்கள் அடிகளை அழைத்துக் கடற்கரைக்குச் சென்று கல்லொடு பிணித்துக் கப்பலில் ஏற்றிச் சிறிதுதூரம் ஓட்டிக் கடலில் வீழ்த்தினர். நாயனர் முன்போலவே அஞ்சினரில்லை.

> "சொற்றுணை வேதியன் சோதிவானவன்
> பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
> கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
> நற்றுணை யாவது நமச்சிவாய வே"

என்று பாடினர். கல் மிதந்தது. கல்லோடு பிணித்த கயிறு அறுபட்டது. மிதந்த கல்லைப் பற்றிக்கொண்டு அடிகள் அதன்மேலேறினர். கடலில் அடித்துக்கொண்டிருந்த அலைகள் கல்லைத் தள்ளித் தள்ளிக் கரையில் சேர்த்தன. இதனை,

> "அப்பெருங் கல்லுமங்கரசு மேற் கொளத்
> தெப்ப மாய்மிதத்தலின் செறிந்த பாசமும்
> தப்பிய ததன்மிசை யிருந்த தாவில்சீர்
> மெய்ப்பெருந் தொண்டனர் விளங்கித் தோன்றினர்."

> "இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
> வருபவக் கடலில் வீழ் மாக்க ளேறிட
> அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
> ஒருகன்மே லேற்றிடல் உரைக்க வேண்டுமோ."

என்ற இரண்டு பாட்டினல் சேக்கிழார் நயம்படப் பாடுதல் காண்க. அன்றியும், அரசர் தம்மை ஆட்கொண்ட வரலாற்றில் சிறந்தனவற்றை நினைத்து

நினைத்து இறைவன் நம்மை ஆட்கொண்ட அருள் விளக்கத் தாம் பாடுகின்ற பாடல்களில் பாடுவது வழக்கம். சிலவற்றை முன்னரும் காட்டினும். இவ்வரிய சைவாற்றையும் அடிகள் பாடியிருக்கிறார். அதனை,

"கல்லினோ டெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லை நீள்வயல் நீலக் குடிஅரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேன்அன்றே."

என்ற திருநீலக்குடித் தேவாரத்தாலறிக.

(தொடரும்)

---

# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

(தொடர்ச்சி)

## திருஞானசம்பந்தர் பதிகமும் அதன் "உவமையிலாக் கலைஞானமும்"

தேவாரத் திருப்பதிகங்களில் எதையெடுத்து நோக்கினும், அது பத்து செய்யுட்களின் மனப் போக்கான கோவையாயிராமல், பத்து அவயவங்கள் பொருந்தியதோர் சீவனாகக் காணப்படும். எனவே, ஓர் அவயவத்தை அதனிருப்பிடம் விட்டு வேறு இடத்திற்கு மாற்றுவோமாயின், அப்பதிகத்திற்கே பெருந் தீங்கு விளைவித்ததாகும். ஆகையால் பத்து அவயவச் செய்யுட்களை ஒரு சீவப்பதிகம் என்னலாம். அத்தகைய பதிக - ஜீவர்களில், திருஞான சம்பந்தர் சிருஷ்டித்தவை மிகவும் அழகும், வலிவும், இளம்பருவ நடையும், பட்டினும் சிறந்த இனிய உடையும், நவரத்னங்களினும் மிக்க பிரகாசமான ஒளியுடைய மணிகளின் சொலியும், அவற்றாலாக்கப்பட்ட அவயவத்திற்குத்தக்க அணியும் வாய்க்கப்பட்டு விளங்கும். இவற்றின் இன்பம் நுகர்ந்தோர் தமிழிலக்கியத்தில் பலர். அவற்றை நன்றாய்ப் பயன்படுத்தியவர் கம்பன் முதலிய சிலர் - ஆயினும் இவற்றின் இலக்கணத்தை நமக்கு எடுத்துக் காட்டியவர் பெரும்பாலும் நம்பியாரூரர், சேக்கிழார், தாயுமானார் ஆகிய மூவரே. இவருள், வன்றொண்டர்,

"வம்பறு வரிவண்டு மணநாற மலரும் மதுமலர்நற் கொன்றையான் அடியலால் பேணா எம்பிரான் சம்பந்தன்"

என்று கூறிய திருவாக்கின் ஒவ்வொரு பதத்தையும் கவனிக்க.

சேக்கிழார் "வம்பறு வரிவண்டு" சருக்கத்தில், திருஞானசம்பந்தர் ஞானப்பாலுண்டதின் பயன்,

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்."

என்பார். எனவே, அவர் பதிகச் செய்யுள் யாவும், நால்வகை மேற்கூறிய

